நம் நாடு பலமும் வளமும் அடைவதற்கு இதர தேசங்களின் உதவியை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதில் பிரயோசனமில்லை; நமது நிலையை நாமே உயர்த்திக்கொள்ளவேண்டும் என்று அடிக்கடி நேரு வற்புறுத்திவருகிறார். கல்யாணிக் காங்கிரஸின் போதும் இதையே எடுத்துச் சொன்னார் அவர்.

"நமது முயற்சிகளினால்தான் நமது வலிமையை நாம் பெருக்கிக்கொள்ள முடியுமே தவிர மற்றவர்களை நம்பியிருப்பதினால் அல்ல. தற்காப்பு, சுயதேவைப் பூர்த்தி ஆகியவைகளினால் நமது பலம் பெருகுவதுடன் இதர நாடுகள் நம்மிடம் கொள்ளும் மதிப்பும் அதிகரிக்கும். நமது நாடு நம்முடையதே என்ற நிலையும் நீடிக்கும்.

இதற்குப் பெருமுயற்சி தேவைதான். ஆள்பலம், பொருளாதார பலம் மாத்திரமல்ல; ஆன்மபலம் பெறுவதற்குரிய முயற்சியும் வேண்டும். அந்தவிதமான முயற்சிதான் நமது நாட்டுக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்தது. சுதந்திரம் கிடைத்த புதிதில் எதிர்ப்பட்ட இன்னல்களை வெற்றிபெறவும் அதுதான் துணை புரிந்தது. அதுதான் நம் நாட்டினரின் உண்மையான பலம். நாம் விழிப்புடன் இருப்போம். நமது தேசத்தின் பூர்வீகமான கலாசாரத்தையும், நிலையான பண்பையும் பாதுகாப்போம். உலகில் சமாதான இடம் பெறுவதற்காக நாம் செய்கிற முயற்சிகளை விடாது வளர்ப்போம். இவற்றுக்கெல்லாம் ஆதாரமாக நம்மை நம்பியே நாம் வாழ்வோம்."

வாழ்க நேருஜி.

லலிதா பிரிண்டர்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை:-56.

